**பொதுப்பணித்துறையில் ஒப்பந்தக்காரர்களுக்கான பதிவு :**

அரசுப்பணிகளை மேற்கொள்ளும் ஒப்பந்தக்காரர்களை பதிவு செய்வதற்கான விதிமுறைகள் தமிழ்நாடு பொதுப்பணித்துறை விதித் தொகுப்பின் பிற்சேர்க்கை-XXIIIல் இடம் பெற்றுள்ளன.

**ஒப்பந்தக்காரர் வகைப்பாடு :**

பொதுப்பணித்துறையில் ஒப்பந்தக்காரர்கள் தங்களுடைய தகுதிகேற்றவாறு பணியின் மதிப்பைப் பொறுத்து பின்வரும் வகைப்பாடுகளில் பதிவு செய்து கொள்ளலாம் :–

| | | |
|---|---|---|
| வகைப்பாடு I | : | ரூ.75.00 இலட்சங்களுக்கு மேல் |
| வகைப்பாடு II | : | ரூ. 75.00 இலட்சம் வரை |
| வகைப்பாடு III | : | ரூ. 30.00 இலட்சம் வரை |
| வகைப்பாடு IV | : | ரூ. 15.00 இலட்சம் வரை |
| வகைப்பாடு V | : | ரூ. 6.00 இலட்சம் வரை |

**விண்ணப்பக் கட்டணம்**

| | | |
|---|---|---|
| கோட்ட அளவில் | : | ரூ. 1000 + சரக்கு மற்றும் சேவை வரி |
| வட்ட அளவில் | : | ரூ.1000 + சரக்கு மற்றும் சேவை வரி |
| மாநில அளவில் | : | ரூ.5000 + சரக்கு மற்றும் சேவை வரி |

**பதிவுக் கட்டணம்**

| | |
|---|---|
| கோட்ட அளவில் (வகைப்பாடு-V) | – ரூ.10,000/– |
| வட்ட அளவில் (வகைப்பாடு-V, IV, III, II மற்றும் I) | – ரூ.20,000/– |
| மாநில அளவில் (வகைப்பாடு-IV, III, II மற்றும் I) | – ரூ.50,000/– |

**ஒப்பந்தக்காரராகப் பதிவு செய்வதற்குரிய இன்றியமையாத் தகுதிகள்**

- வருமானவரித் துறையில் தாக்கல் செய்யப்பட்ட வருமான வரி விபரஅறிக்கை மற்றும் நிரந்தர கணக்கு எண் (PAN).
- சரக்கு மற்றும் சேவைவரி நிர்ணய எண் (GSTIN)
- ஒப்பந்தக்காரர், தேர்ந்தெடுக்கும் வகைப்பாட்டின் 30 சதவீதத்திற்கு குறையாத வகையில் வருவாய்த் துறை வழங்கும் அசையா சொத்துக்களுக்கான சொத்து

மதிப்புச் சான்றிதழ் பெறப்பட்டிருக்க வேண்டும். பதிவு செய்ய விரும்பும் தனி நபர் பெயரிலோ அல்லது நிறுவனமாக இருப்பின் பங்குதாரருடைய பெயரிலோ சொத்து மதிப்புச் சான்றிதழ் மற்றும் சமீபத்திய தணிக்கையாளர் சான்றிதழ் பெறப்பட்டிருக்க வேண்டும்.

- பணிகளை மேற்கொள்வதற்கான நிதி நிலைமையை அறிய, ஒப்பந்தக்காரர் கடந்த ஒரு வருடத்தில் வங்கியில் மேற்கொண்ட பணப் பரிமாற்றம் குறித்த சான்றிதழ்.
- கட்டுமானப் பணிகளில் அனுபவம்.
- ஒப்பந்தக்காரரிடம் உள்ள கருவிகள் மற்றும் தளவாடங்கள் பற்றிய விவரங்கள்.
- ஒப்பந்தக்காரரிடம் உள்ள பணிகளை மேற்பார்வை செய்வதற்கான தொழில்நுட்பப் பணியாளர்களின் விவரங்கள்.

சொத்து மதிப்புச் சான்றிதழ், அனுபவம் மற்றும் கடந்த கால செயல்திறன் ஆகியவற்றின் அடிப்படையில் அடுத்த வகைப்பாட்டிற்கு உயர்த்துவது நிர்ணயிக்கப்படும்.

ஒப்பந்தக்காரர் ஒரு வகைப்பாட்டில் குறைந்த பட்சம் ஒரு வருடம் செயல்பட்டிருந்தால் மட்டுமே வகைப்பாடு IV, III மற்றும் II போன்ற அடுத்த உயர் வகைப்பாட்டில் பதிவு செய்ய இயலும்.

**பதிவுக் கட்டணம் செலுத்த வேண்டிய கணக்குத் தலைப்பு**

**0059.** பொதுப்பணி – **80.** பொது – **800.** ஏனைய வரவுகள் **–** AC. பலவகை – **233.** தொழில் முறை சிறப்பு கட்டணங்கள் – **09.** பொதுப்பணி – கட்டடங்கள் (DPC.0059-80-800-AC-233-09)

**விண்ணப்பங்களை நிராகரித்தல்**

விண்ணப்பத்தை பதிவு செய்யும் அதிகாரம் உள்ளவருக்கு, பதிவு செய்வதற்காக பெறப்பட்ட எந்த விண்ணப்பத்தையும் நிராகரிக்க அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது. அவ்வாறு நிராகரிக்கும் நிலையில், நிராகரிப்புக்கான காரணங்களை சுருக்கமாக தெரிவித்து விண்ணப்பதாரருக்கு காரணம் கேட்புக் கடிதம் அனுப்பப்பட வேண்டும்.

**வகைப்பாட்டில் இறக்கம்**

பதிவு செய்யும் அலுவலர், ஒப்பந்தக்காரரை வகைப்பாடு இறக்கம் செய்யலாம். அவ்வாறு வகைப்பாடு இறக்கம் செய்தாலும் ஒப்பந்தக்காரரின், விளக்கத்தைப் பெற்று தகுதியின் அடிப்படையில், அவரை மீண்டும் அதே வகைப்பாட்டில் பதிவு செய்யவும் கருதலாம்.

**எளிதான மற்றும் பாரபட்சமற்ற அணுகுமுறை**

அரசால் அவ்வப்போது வெளியிடப்படும் வழிகாட்டு நெறிமுறைகளைப் பின்பற்றி கண்காணிப்புப் பொறியாளர்கள் மற்றும் செயற்பொறியாளர்கள் பாரபட்சமற்ற முறையில் நடந்து கொள்ள வேண்டும்.

**சேவையை நிறைவாக பெறுவதற்கு இத்துறையின் எதிர்பார்ப்பு**

மேற்குறிப்பிட்ட சேவையை பெற விரும்புவர்கள், பூர்த்தி செய்யப்பட்ட விண்ணப்ப படிவத்தை அதனுடன் தேவைப்படும் மதிப்பிற்கான சொத்து மதிப்புச் சான்றிதழ், அனுபவச் சான்றிதழ், வருமானவரி அறிக்கை தாக்கல் செய்ததற்கான ஆதாரங்கள், விற்பனைவரி பதிவுச் சான்றிதழ், நிதித் திறன் குறித்த ஆதார விவரங்கள், அவர்களிடமுள்ள பணியாளர் திறன் மற்றும் இயந்திரங்களின் விவரங்கள் தொடர்பான மூல ஆவணங்களை கண்காணிப்புப் பொறியாளரிடம் அல்லது செயற்பொறியாளரிடம் உண்மைத் தன்மையை சரிபார்த்திட சமர்ப்பிக்க வேண்டும்.

**குறைகளைக் களைதல்**

குறைபாடுகள் எதுவாக இருந்தாலும் அந்தந்த கண்காணிப்புப் பொறியாளர் அல்லது செயற்பொறியாளரை தொடர்பு கொண்டு தீர்வு காணலாம்.